# லீலாவதி சந்திர க்ரஹணம்

## ASTRONOMY IV




கலிசுத்த தினங்கள் 18,48,896 நாட்கள்

கலிகதம் 5061. இங்கிலீஷ் 1961.


மாயவரம்

குழந்தை V. சுப்பிரமணிய சாஸ்திரிகள்

AZIZ NAGAR, MADRAS-24



1961

## சந்திர க்ரஹணம்

சார்வரி வருஷம் ஆவணி மாதம் 21-ம் தேதி திங்கட்கிழமை சதய நட்சத்திரம் பௌர்ணமி இன்றைய தினம் பூர்ண சந்திரக்ரஹணம்.

சார்வரி வருஷம் மாசி மாதம் 19-ம் தேதி வியாழக்கிழமை பூர நட்சத்திரம் பௌர்ணமி, இன்றைய தினம் சந்திரக்ரஹணம்.

## க்ரஹணத்தை எப்படி கணிக்கிறார்கள்

நமது தேசத்தில் கணித சாஸ்திரம் புத்தர் காலத்திற்கு முந்தியே கணித்தார்கள். புத்தர் காலத்திற்கு முந்தின காலம் வேதகாலம். புத்தர் காலம் B. C. 562. அதற்கு முந்தின வேத காலம், புராண காலம் எனப்படும். புத்தருக்குப்பிந்தி சங்கரர் காலம்.

## கலியுகம்

தற்காலம் கலியுகம் நடக்கிறது. கலியுக ஆரம்பத்திலிருந்து கணிக்கவேண்டும். கலியுக ஆரம்பம் பிரபவ வருஷம் சித்திரை மாதம் 1-ம் தேதி சுக்ல ப்ரதமை (சூரியக்ரஹணம்) வெள்ளிக்கிழமை அன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அச்வதி நட்சத்திரம் தற்காலம் 5061 கலியுகம் சாலிவாஹன சகாப்தம் சார்வரி வருஷம் என்கிறோம். இந்த வருஷத்தில் இரண்டு சந்திரக்ரஹணம் இந்தியாவில் தெரிகிறது. இதன் கணிதமும் ஆராய்ச்சியும் ஆகும்.

## கலியுக நாட்கள்

சார்வரி வருஷம் மாசி மாதம் 19-ம் தேதி வியாழக்கிழமை கலியுகாதி 18,48,896 நாட்கள். (பதினெட்டு லக்ஷத்து நாற்பத்தெட்டாயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூத்தாறு) 2,64,128 வாரங்கள். ஒரு வாரத்திற்கு ஏழு நாட்கள். கலியுக ஆரம்பம் வெள்ளிக்கிழமை இன்றைய தினம் வியாழக்கிழமை.

## ஆரம்ப ஆதிநாள்

ஆதிகாலம் என்பதை ஆகாயத்தில் காணப்படும் சந்திர, சூரியர்களால் கண்டு கொள்கிறோம். சுமார் 4,000 (நாலாயிரம்) வருஷங்களாக கணிதத்தை வேதம் படித்தவர்கள் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். வேதகாலம் கலி 1000 வருஷமாகும். வேதம் வானத்தில் காணப்படும் நட்சத்திரங்களாலும் சந்திர, சூரியாதி க்ரஹணங்கள் கதியாலும் கணித்து சேர்க்கப்பட்ட வாக்கியங்களாகும். ஒருவர் ஒரு வேதம் படித்து அதில் திறமையுடன் கர்மாக்களைச் செய்தாலேயே பெரியவர் என்ற பெயர் வழங்கப்படுகிறது. 4 வேதங்கள் இருக்கின்றன. ஸம்ஸ்க்ருதத்தில் நல்ல பாஷாக்ஞானம் உள்ளவர்களாக இருந்தால் 6 சாஸ்திரம் வரும் என்கிறார்கள். படித்தவர் தனக்கு ஒரு சாஸ்திரம்

தான் வரும் என்கிருர். 6 சாஸ்திரங்கள் இருக்கின்றன. புராணப்ரவசனம் செய்பவர்கள் வால்மீகி ராமாயணம், வ்யாஸ பாரதம் என்பவைகளில் சுலோக பூர்வமாகச் சொல்லுபவர்கள் பொதுஜனங்களால் மஹான் என்று ஆமோதிக்கப்படுகிருர்கள். இன்னும் இதர சாஸ்திரங்களால் பெரியோர்கள் என்பவர்கள் எல்லோரும் ஆகாயத்தைப் பார்க்கிருர்கள். இன்றைய நட்சத்திரம் என்ன? சந்திரபிம்பத்தால் திதி என்ன? பௌர்ணமியா? என்கிருர்கள். எல்லோருக்கும் நட்சத்திரம் ஒன்றுதான். நட்சத்திரம் ஆதிகாலத்திலிருந்து இன்றுவரை கணித்துத்தான் சொல்லவேண்டுமே தவிர நான் மஹான், நான் வித்வான் என்று நட்சத்திரத்தை சொல்லிவிட முடியாது. தற்காலம் கணிதம் மாத்திரம் தெரியும். ஆகாயம் தெரியாது, என்ருல் நட்சத்திரத்தில் ஒன்றும் தெரியாது.

## தற்காலம்

தற்காலம் பள்ளிக்கூடங்களில் பிள்ளைகளுக்கு பாடம் கற்பிப்பதில் ஆதிகாலம் என்பது B. C. என்றும் A. D. என்றும் சொல்லப்படுகிறது. A. D. என்பது இங்கில்ஷ்காலண்டர் வருஷமாகும் B. C. என்பது கிருஸ்துவுக்கு முத்தியகாலம் என்பதாகும். ஆதிகாலம் என்பது இவர்களுக்கு குறிப்பிட்ட ஓர்தினத்தை குறிக்கவில்லை. இதனுல் இவர்களுக்கு வானசாஸ்திரத்தின் 1வது டிகிரி என்பது விளங்கவில்லை. நமது தேசத்தில் இங்கிலீஷ் படித்து ஸம்ஸ்க்ருதமும் படித்து கலந்துபார்க்காததால் ஆதிகாலம் என்பது இந்து தேச சரித்திரத்தில் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

## ஆதிகாலம்.

சூரியனுல் ஆதிகாலம் என்பதை ஆரம்பிப்போம் ஆதி என்ருல் அதற்கு முந்தியது இல்லை. சூரியன் தான்ப்ரகாசமானது. பிராகாசத்திற்கு முந்தி இருட்டு. நட்சத்திரங்களால் கூடியவான விட்டமாகும், சூரியனை ஆதிக்ரஹவாரம் என்றும் ஆதிவாரம் என்றும் சொல்லுகிருேம். 4000 வருஷங்களுக்கு முந்தியே சூரியனை கவனித்திருக்கிருர்கள். சூரியனை கணித்து சூரியனுல் வருஷம், அயனம், ருதுக்கள் மாதங்கள், பக்ஷங்கள், திதிகள் கண்டு பிடித்தார்கள். '' தற்காலம் அதே சூரியன் அசையவில்லை? பூமி ஒடுகிறது என்று நம்பவைத்திருக்கிருர்கள்.'' இதை சரியாக, கவனித்துப்பார்க்காததால் மேல் நாட்டார்கள் சந்திர மண்டலத்திற்குப்போய் விட்டதாக எண்ணுகிருர்கள்.

## சந்திர மண்டல ப்ராயணம்.

சந்திரனை கணித்து நட்சத்திரம் என்று பெயர் வைத்தோம், சூரியனை கணித்து மாதம் என்று பெயர் வைத்தோம். இதர க்ரஹவாரங்களையும் கணித்து, ராமஜாதகம், கிருஷ்ணஜாதகம் என்று எழுதி வாழும் ஜனங்களுக்கு ஜோஸ்யம் சொல்லிவந்தோம். சந்திரமண்டலத்தில் மேல் நாட்டுவிக்ஞான முறையால் ராக்கெட்டு மூலம் இறங்கி மனிதன் வாழத்தொடங்கினுல் ஜோஸ்யம் பொய் போலும் ஆகிவிடும்.

சமாதானம். இந்துக்கள் பசுக்களையும், அச்வத்தையும், கஜத்தையும், விருக்ஷத்தையும், நதியையும், பக்ஷியையும் அஷ்டோத்திரம் பண்ணி வணங்கும் போது சந்திரமண்டலத்தில் மனிதன் இறங்கி விட்டதால் ஜோதிஷத்தை விட்டுவிட மாட்டார்கள்.

## சந்திர மண்டல ப்ரயாணம்.

மேல்நாட்டு விக்ஞானிகள் சந்திரமண்டலப் பிரயாணத்தில், ரொம்பவும் முன்னிற்கின்றனர். நமது தேசத்தில் தான் வான சாஸ்திர கணிதம், கரஹணங்கள் கணிக்கப்பெற்று இருக்கிறது. இன்றயதினம் சந்திரமண்டலம் எந்த இடத்தில் ஊர்ந்து வருகிறது என்ருல் கணித்துவிடமுடியும். ராக்கெட்டு மூலம் தாண்டி குதித்து விடலாம். ராக்கெட்டு விஞ்ஞானம் நமக்கு வரவில்லை. மேல் நாட்டாராக இருந்தாலும் நம் நாட்டார்களாக இருந்தாலும் சந்திரன் முதலில் எங்கு புறப்பட்டது. எப்படி ஊர்ந்து செல்லுகிறது என்பதை கணிப்பது அவசியமாகும்.

மற்றய விஞ்ஞானம் போல் கிரஹமண்டல விஞ்ஞானங்கள் மனிதர்களிடம் இன்னும் கிடைத்து விடவில்லை. முயற்சியை இகழோம்.

## சந்திர மண்டல கணிதம்

சந்திரகணிதம் கலியுக ஆரம்பத்திலிருந்து கணிக்க வேண்டும். கலியுகநாட்கள் 18,48,896 ஆகும். சத்திரன் ஒவ்வொரு நாளும் 1நாட்சத்திர தூரம் மேற்கிலிருந்து கிழக்கில் ஊர்ந்து வருகிறது. 27 நாள் 19நாழிகை 18 விஞடிகளில் ஒருசுற்று சுற்றிவருகிறது. 82 நாட்களில் 3 சுற்றுவருகிறது. இது வரை 67,641 தடவை பூமியைச் சுற்றியிருக்கிறது என்று கணக்கிடலாம். இன்றயதினம் நட்சத்திரம் என்ன? இந்த கணிதம்மேல் நாட்டார்களால் கணிக்க வில்லை. ஆனுலும் பாகைகலை என்று குறித்து விடுகிருர்கள்.

## நமது தேசசந்திரகணிதம்.

வானமண்டலம் 360 பாகைகள், ஒரு நாளைக்கு 13 பாகை 20 கலைகள் சந்திரன் ஊர்ந்து வருகிறது. இது ஓர் நட்சத்திரமாகும். சூரியனுக்கு 12 பாகை முன்னும் பின்னும் ஊர்ந்து வந்தால் சந்திரன் தெரியாது. மேல் நாட்டார் சூரியன் நகருது என்கிருர்கள். இந்த ஏமாற்றத்தை இந்து தேச பஞ்சாங்க கணிதர்கள் தெரிந்து கொள்ளாதது மிகவும் வருந்தத்தக்கது. ஆகாயத்தில் நட்சத்திர உருவத்தைக் கண்டு காலம் கணிப்பார்கள். சந்திரன் கணிதம் வராது. கலி ஆரம்பத்திலிருந்தேவர வேண்டும். அப்பொழுது சந்திரன் வேகம் காணப்படும் இப்படி இயற்கையை அறிந்து கணித்தவர்கள் சந்திரமண்டலப் ரயாணம் என்பதை கவனிக்க வேண்டும்.

நட்சத்திரங்களின் பெயர்கள். 27 நாட்களில் சந்திரன் வானத்தில் சுற்றிவரும் போது பெயர்கள் வைக்கப்பட்டிருக்கிறது. 4000 வருஷங்களுக்கு முந்தியே பெயர்கள் வைக்கப்பட்டது. பெயர் வைக்கப்பட்டு அந்த 27 நட்சத்திரங்களையும் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டி

ருக்கிறது வெறும் ஸ்தோத்திரத்தை சொல்லுபவர்களே பண்டிதர்கள் என்ருல் கணித்து பெயர்வைத்தவர்கள் எப்படி வாழ்ந்திருப்பார்கள். ஆராய்ந்து அந்தக் காலத்தை நினைக்கவும்.

## நக்ஷத்ரேஷ்டி

சுமார் 4000 வருஷங்களுக்கு முந்தி நட்சத்ரேஷ்டி என்று கணித்து சந்திரனுக்கு ஹவிஸ், நெய், பால், அக்னியில் கொடுத்தார்கள். தற்காலம் ஜோதிஷர்களுக்கு பலன் கொடுக்கிறது. ராக்கெட்டு மூலம் போய்ச் சேர்ந்தால் இன்னும் விசேஷமாக இந்துக்கள் பலன் அடையலாம். திருப்பதியைப் போல் புண்ய க்ஷேத்ரக்ரஹம், ஆகலாம்.

## முதல் நக்ஷத்திரம்

1-வது பாகை 1-வது நட்சத்திர ஆரம்பம் அச்வதி. 14-வது பாகையில் பரணி, 27-வது பாகையில் கார்த்திகை நட்சத்திரம். வேதம் முதலில் கிருத்திகை நட்சத்திரத்தில் ஆரம்பிக்கிறது. எது சரி என்று வேதம் படித்தவர்கள் வாதிக்கிருர்கள். தீர்மானம் ஆகும் வரை பொறுக்கமாட்டார்கள். வேதம் 4000 வருஷமாக அனுஷ்டிக்கப்பட்டாலும் சரியான ஆராய்ச்சியை அடையவில்லே. முதல் நட்சத்திரம் அச்வதி தான். வேதம் ஒத்துக்கொள்ளுவதும் ஆராய்ச்சியும் அச்வதி நட்சத்திரம் தான்.

## ஆதிநாள் ஆதிகாலம்

ஒரு நாளே குறித்து இதுவே ஆதி நாள். ஆதி காலம் என்று குறிக்கவேண்டும். கலியுக ஆரம்பமே ஆதி நாள் என்று குறிக்கிருேம். சந்திரன் ஆதி நாளில் ஆதிகாலத்தில் அச்வதியில் புறப்பட்டது என்று கணிக்கிருேம். இன்றைய தினம் வெள்ளிக் கிழமை எனப்படும். வெள்ளிக் கிழமை சூரியோதம். சந்திரன் அச்வதி முதல் பாதத்தில் ஊர்ந்து வருகிறது. அமாவாசை. கேது க்ரஸ்தம் கேதுவும் நிற்கிறது. சூரியக்ரஹணம் சூரியனும் அச்வதி 1வது பாகையில் ஊர்ந்து வருகிறது. காலத்தின் முதல் நாள். தற்காலம் நடந்து வரும் காலத்தின் முதல் நாள். இதற்கு முந்தி காலமே கிடையாதா என்றே கேள்வி வரும்? கணிதர்கள்தான் கவனித்து நிருபிக்க முடியும் (அனுவசியமான ஆராய்ச்சியே என்பது புலப்படும்) 1வது நாள் அச்வதி நட்சித்திரம் சந்திரன் அச்வதியில் ஊர்ந்து வருகிறது. சுக்லப்ரதமை ஆரம்பம். சூரியோதய காலம் சூரியக்ரஹணகாலம். இரண்டாவது நாள். சனிக்கிழமை. பரணி நட்சத்திரம். சுக்லத்விதீயை திதியாகும். சந்திரன் மேற்கில் அடிவானத்தில் தெரியும். கலியுகம் 3வது நாள். ஞாயிற்றுக் கிழமை கார்த்திகை நட்சத்திரம். திருதீயைதிதி. சூரியன் அச்வதி 1ம் பாதத்திலிருக்கிறது. சந்திரன் விருஷப ராசியில் ஊர்ந்து வருகிறது. சந்திரன் விருஷ பராசியில் ஊர்ந்து வந்த பிறகே பூமியில் உஷ்ணம் ஏற்படுகிறது. ஏற்பட்டது. மேஷராசியில் சூரியன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி; ஆறு க்ரஹங்கள் இயற்கை காலத்தை ஆரம்பித்தது. தற்காலம் வரை கணிதம் ஒரே நிலேயில் கணிக்கப்புடுவதை கவனிப்போம்.

## சந்திரன் கணிதம்

வானவிட்டம் 360 பாகைகள். 12 ராசிகள். ஒரு ராசி 30 பாகைகள் எனப்படும். 27 நட்சத்திரங்கள் 360 பாகைகளையும் பூர்த்தி செய்கின்றன. வானத்தில் மேற்கிலிருந்து கிழக்காக சந்திரன் ஊர்ந்து வரும் வழியில் நட்சத்திரத்தை கண்டுகொள்ளவேண்டும். வேதம் இதில் முக்கியமான ஆராய்ச்சியை செய்திருக்கிறது. சந்திரன் கணிதத்திற்கு 248 வாக்கியங்கள் இருக்கிறது. இந்த வாக்கியங்களைக்கொண்டு சந்திரன் இருப்பிடமும் அதன் வேகத்தையும் தெரிந்துகொள்ளுகிறோம். வரருசியால் செய்யப்பட்ட வாக்கியம் என்று கேள்விப்படுகிறோம். அவர் எந்த ஊர், எப்படி இருந்தார் வயது என்ன? என்பது தெரியவில்லை. கணித சாஸ்திரத்தைப் படித்தால் அவரே வேதகுரு என்பதாகத் தோன்றுகிறது. அவரும் ஒருவரிடம் படித்தவர் என்றால் ஆதிகாலம் வரை நாம் ஊஹிக்கவேண்டும். ஆதிகாலம் என்பதோ கலி ஆரம்ப தினத்தோடு நின்றுவிடும். பொதுவாக கணிதம் ஆரம்பித்துக் கொடுத்து அதன் சிரமங்களை விலைக்கு விற்காமல் இருக்கச் செய்த வாக்கியங்கள் கிடைக்கின்றன. நாம் ஆழ்ந்து கவனிக்க முடியாததால் பெரியோர்கள் சாஸ்திரங்களை பரவச் செய்யாமல் விட்டுவிட்டார்கள் என்கிறோம்.

இயற்கைவானம் 1 வட்டம் எனப்படும். வட்டத்தில் 12 ராசிகள் எனப்படும். ஒரு ராசிக்கு 30 பாகைகள் எனப்படும். 1 பாகைக்கு 60 கலைகள் எனப்படும்.

## சந்திரன் வான வட்டத்தில் ஊர்ந்து வருதல்

(1) கீர்ணச்ரேய : 2 தேனவச்ரீ: 3 ருத்ரஸ்து நம்ய: பரீக்ஷைக்காக மூன்று வாக்கியங்கள் எடுத்துக் கொண்டோம். 248 வாக்கியங்கள் சந்திரனுக்கு ஏற்பட்டிருக்கிறது. 28வது வாக்கியத்தில் சந்திரன் வான வட்டத்தில் 1வது பாகைக்கு வந்துவிடுகிறது. சந்திரன் 14 நாள் ஆரோஹணத்தில் ஊர்ந்து வருகிறது. அதாவது 723 கலைகளில் ஆரம்பித்து 859 கலைகள் வேகத்தில் ஊர்ந்து வருகிறது. அடுத்த 14 நாட்களில் அவரோஹணத்தில் 858 கலைகளிலிருந்து 722 கலைவேகத்தில் வந்து நிற்கிறது. 28 நாட்களில் வான வட்டத்திற்குமேல் 506 கலைகள்கூட ஊர்ந்து வந்து நிற்கிறது. 248 வாக்கியத்தில் 248 நாட்களில் 27 பாகை 44 கலைகளில் வந்து நிற்கிறது. இதுவே 28வது 'வாக்கியத்தின் சராசரி கதியாகும்' சந்திரனுக்கு 3 வாக்கியங்கள் எடுத்துக் கொண்டோம். 3 நாட்கள் என்பதாகும். வெள்ளி, சனி, ஞாயிறு என்பதாகும் (1) 723 கலைகள் 12 பாகை 3 கலைகளாகும். (2) 24°9 கலைகளாகும். முதல் நாள் பாகை கலைகளை கழித்தால் 12°6 கலைகள் வேகம் முதல் நாளைவிட 3' கலைகளாகும். (3) 1.6 22 கலைகளாகும். வேகம் 12°13 கலைகளாகும். 2வது நாளைவிட 3வது நாள் 7 கலைவேகம் ஜாஸ்தி. இந்த கணிதம் வரருசி என்பவரால் ஆகாயத்தைப் பார்த்து கணித்து உண்மையை உணர்ந்த பிறகு செய்த வாக்கியங்களாகும். தற்காலம் இந்த வாக்கியங்கள் பிராசாரப்படுத்த வேண்டியவைகளாகும். வீமேசர் உள்ள முடையான் என்பதில் இந்த வாக்கியங்களுக்குத் தமிழ் வாக்கியங்கள் காணப்படுகிறது.

## சந்திர வாக்கியம்

(3) ருத்ரஸ்து நம்ய : 1-06·22· ருத்ரஸ்து நம்ய : என்பது எண் களாகும். இந்த வாக்கியத்தின் அளவு 1 ராசி 6 பகைகள் 22 கலை களாகும். இதைப்படித்துத்தெரிந்து கொண்டு இதை பிறருக்கு சீராக சொல்லிக் கொடுக்க தற்கால விக்ஞானப்படிப்பில் இடம் இல்லை. ஜோதிஷம் வெறும்தத்வம். அதற்கு ஆதாரமானது கணிதம். தற்கால விஞ்ஞானத்தில் இந்த சாஸ்திரம் தலை தூக்காமல் வெட்கி நிற்கிறது. ஆனாலும் உண்மை நிரம்பிக்கிடக்கிறது. சந்திரன் வானவட்டத்தில் ஊர்ந்து வருவதற்குச் செய்தவாக்கியங்களில் ராசி, பாகை, கலைவரைக் கும் எண்கள் குறிக்கப்படுகிறது.

## 28 நாள்

சந்திரன் 27 நாள் 19 நாழிகை 18 விநாடிகளில் 27 நட்சத்திரங் களிலும் ஊர்ந்துவான வட்டத்தை ஒரு முறை சுற்றிவிடுகிறது. 27 நாள் 7 மணி 43 நிமிஷங்கள்.

## ஒரு நாள்

இரவும், பகலும் சேர்ந்து ஒரு நாள் ஆகிறது. இந்தியாவில் பகலில் சூரியோதயத்தில் நாள் ஆரம்பிக்கப்பட்டது. இந்தியாவிற்கு கிழக்கே உள்ள 12000 மைல்கள் உள்ள ஊர்களுக்கு பகலில் காலம் ஆரம்பிக்கப் பட்டது. இந்தியாவிற்கு மேற்கில் உள்ள 12000 மைல் கள் உள்ள ஊர்களுக்கு இரவில் காலம் ஆரம்பிக்கப்பட்டது.

## அஹோராத்ரம்

இரவு பகல் எப்படி உண்டாகிறது ? நமது தேசத்தில் சூரியோ தயத்திற்கு சூரியோதயம் ஒரு நாள் என்று எண்ணி வந்தோம். பகல் 30 நாழிகைகள். இரவு 30 நாழிகைகள் ஆக 60 நாழிகைகள். இந்தக் காலத்தை எப்பொழுது தீர்மானித்தார்கள் என்று ஆராய் வோம். வேதத்தில் காலத்தை, நட்சத்திரத்தை, தேவதையை, ஸ்வபாவ குணத்தை, ரூபத்தை வர்ணிக்கிறது. வேதகாலம் எப் பொழுது ? கௌதம புத்தருக்கு முந்தி வேதகாலம் என்று இந்து தேச சரித்திர வாயிலாக அறிகிறோம். கௌதம புத்தர் காலம் ஆதிகாலத்திலிருந்து, கலியுக ஆரம்பத்திலிருந்து, 2550 வருஷங்கள் எனப்படுகிறது. புத்தருக்கு முந்தி வேதகாலம் என்றும் ராஜ்ய பரி பாலனங்கள் நடந்தது என்றும் தெரிந்துகொள்ளுகிறோம். வேதத் தில் வருஷம், மாதம், ருது, நட்சத்திரம் எல்லாம் சொல்லப்பட்டிருப்ப தால் வேதத்தையே ஆராய்ந்து பார்க்கலாம். வேதகாலத்தில் அஹோராத்ரம் என்பதை எப்படி கண்டுபிடித்தார்கள். பூமி தன்னைத் தானே சுற்றிக்கொள்வதால் தற்காலம் அஹோராத்ரம் இரவு பகல் உண்டாகிறது என்கிறோம். வேதகாலத்தில் பூமி தன்னைத் தானே சுற்றிக்கொண்டது என்று வேதம் தெரிந்தவர்கள் ஒப்புக்கொண்டார் களா ? சரியா ? வேத தர்ம பரிபாலன சபைகள், சங்கரர் மடங்கள் ஒப்புக்கொண்டதா ? இல்லை. விசாரிக்க அவகாசம் கிடையாது. ஆராய்ந்து பார்ப்போம்.

## அஹோராத்ரம்

பூமிதன்னைத் தானே சுற்றுவதால் இரவு பகல் உண்டாகிறது என்பது மேல் நாட்டாரால், வெள்ளைக்காரர்களால் நமக்குத் தெரியப் படுத்திய விஷயமாகும். நம் நாட்டில் தற்காலம் இதுவே காலத்தை குறிக்கும் முள்போல் நம்பப்படுகிறது. வேதகாலத்தை இன்றைக்கு 4000 வருஷங்களுக்கு முந்தியே நம்ப இடம் இருக்கிறது. உயர்ந்த ஆராய்ச்சிகள். ஸ்தோத்திரங்கள் எல்லோராலும் அநுபவிக்கக் கூடிய விக்ஞான விஷயங்கள், "தற்காலம் விக்ஞானக் கருவிகள் பணக்கார ரால் சிலருக்கே அனுபவிக்கும் விஷயங்களாகிறது அஹோராத்ரத்திற் காக க்ளோப் என்னும் உருண்டை கருவி. காட்டப்படுகிறது. இதை ஒப்புக்கொள்கிறோம். தீபத்தை ஏற்றி வைத்து இருட்டில் க்ளோப்பை பந்துபோல் வடிவமுள்ள பூமியை சுற்றினல் வெளிச்சம் விழும் இடம் பகலாகவும், வெளிச்சம் இல்லாத பக்கம் இரவாகவும் காட்டிக் கொடுக்கிறோம். பூமி உருண்டை, பந்து போல் உருவம் உள்ளது என்பதை சமீபகாலத்தில் சுமார் 300 வருஷங்களுக்குள்ளேயே தெரிந்து கொண்டோம் சரித்திரவாயிலாக !? வேத காலத்திலேயே வருஷங்கள், மாதங்கள் எண்ணப் பட்டதால் அவர்கள் எப்படி அஹோராத்ரத்தை நினைத்தார்கள். நினைத்தது தப்பு என்று தற் காலம் நிரூபித்து விட்டதா? ஆம், இல்லை.

## திக்குகள்

சூரியன் உதிக்கும் இடம் கிழக்கு, அஸ்தமிக்கும் இடம் மேற்கு. இரவில் கிழக்குப் பார்த்து நின்றால் வலது பக்கம் தெற்கு. இடது பக்கம் வடக்கு. இந்தத் திக்குகளை க்ளோப்பில் பந்து போல் உள்ள பூமி உருண்டையில் எப்படி குறிப்பது என்றும், எப்படி உருட்டுவது சுழலவைப்பது என்பதையும் திக்குகளோடு கவனிக்கவேண்டும்.

## ஏமாற்றம்

சுவற்றில் மாட்டப்படும் பூமண்டல படத்தில் தலைப்பக்கம் வடக்கு. கீழ்ப்பக்கம் தெற்கு என்றும் மற்ற கிழக்கு, மேற்கு திக்குகளையும் சரியாக குறிப்பதைப் பார்த்துவிட்டு பந்துபோல் உள்ள பூமண்டலத் தின் பிரதிமையாகக் காணப்படும். களோப்பிலும் தலைப்பக்கம் வடக்கு, கீழ்ப்பக்கம் தெற்கு, மற்ற இயற்கையான கிழக்கு மேற்குகளை ஒப்புக்கொண்டு க்ளோப்பை உருட்டி இரவு பகலை ஒப்புக்கொண் டோம். திக்குகள் ஏமாற்றப்பட்டுவிட்டது.

## விழித்துக்கொள்

பூமண்டலத்தின் ப்ரதிமையான க்ளோப்பை கையில் பிடித்து வடக்குப் பக்கத்தில் வட அமெரிக்கா, தென் பக்கம் தென் அமெரிக்கா என்று உருட்டி தலைக்கு நேராக 90° டிகிரியில் பல்பை எரியவிட்டு அஹோராத்ரம் இரவு பகலை ஏற்படுத்தினல் பூமி எப்படி எந்தத் திக்கில் சுற்றுகிறது என்றும், அல்லது பூமி எப்படி ஆகாயத்தில் (மனேபாவத்தில்) மிதக்கவேண்டும் என்றும் சூரியனைச் சுற்றுமா? சூரியன் சுற்றுமா? எந்த விஷயத்தில் மனிதர்கள் ஏமாற்றப்படு கிறார்கள் என்பதும் புரிந்துவிடும்.

## அஹோராத்ரம் ஒரு நாள்

வேதகாலத்தில் சுமார் 4000 வருஷங்களுக்கு முந்தி ஒரு நாள் என்பதை குறிப்பிட்டார்கள். சூரியோதயத்திற்கு சூரியோதயம் ஒரு நாள் எனப்படும். ஒரு கிழமை, ஒரு நட்சத்திரம் எனப்படும். ஒரு வருஷம் என்பது வானவட்டமாகும். ராசிஎன்பது மாதமாகும் பாகை என்பது தேதியாகும், கலைஎன்பது நாழிகையாகும், விகலை என்பது வினடிகள் ஆகும், அதன் கீழ் தர்ப்பரைகள் என்பவை களாகும்.

## வேதத்தால் தெரிந்துகொண்டது

நட்சத்திரம் 27 தான். 28என்பது சந்திரன் கதியைகுறிப்பது ½க்கு மேல் இருந்தால் கணிதத்தில் ஒன்று என்ருகும். ½ க்குக்கீழ் இருந்தால் தள்ளப்படும். சந்திரன் வானவட்டத்தில் 27நாள் 8மணியில் வந்து சேர்ந்து விடுகிறது. 27நாள் 12மணியாக இருந் தால் 28நட்சத்திரம் எனப்படும். குறைவானதால் 27தான். கணித நிச்சயம். நட்சத்திரம் தன் இடத்தை விட்டு நகருது. சந்திரன் ஊர்ந்து வினடிகள் ஆகும், அதன் கீழ்தர்ப்பரைகள் என்பவை களாகும்.

## கண்முன்னல் பார்ப்பது

நட்சத்திரம் உதயமாகிறது. மேற்கில் மறைகிறது. வேதத் தால் நகருத நட்சத்திரங்கள், நட்சத்திர இருப்பிடமான ராசிகள் கண்முன்னல் உதயமாகி அஸ்தமிக்கிறது என்பதால் ஆராய்ச்சி அவசியம்.

## பூமி தன்னைத்தானே சுற்றிக் கொள்வது

ஆராய்ச்சியில் நட்சத்திரங்கள் உதயமாகவில்லை, அஸ்த மிக்க வில்லை என்ருல் பூமி மேற்கிலிருந்து கிழக்காகச் சுற்றுகிறது என்பது சாத்தியம். இதை பூமியின் ப்ரதிபிம்பம், முழு விஸ்தீர்ணம் திக்கு களின் முடிவு (கிழக்கு மேற்கு முடிவு) தெரிந்த பிறகு சாதிக்க வேண்டும். 400 வருஷங்களில் தெரிந்த கொண்டிருக்கிருேம் கிழக்கு மேற்கு கோடுகள் 25,000 மைல்கள் என்று, இதை வேத காலத்தவர் கள் தெரிந்துகொண்டு விட்டார்கள் என்று நம்பமுடியாது. தெரிந்த வைகள் பல. பூமி தன்னைத்தானே சுற்றிக் கொள்கிறது என்று ஒப்புக்கொண்டால் சாத்தியமா? எவ்வளவு கேள்விகள் ஏற்படும். வேதத்தால் வான சாஸ்திர கணிதங்களை கவனித்துக் கொண்டு மறுபடி பூ மண்டலத்தை ஆராய்வோம்.

## விபரீதக் ஞானம்

அமாவாசை. சூரியன் சந்திரன் இரண்டும் சேர்ந்தால் அமா வாசை. இன்றைய நட்சத்திரம் என்ன? இது வேதத்தின் ஆராய்ச்சி. அமாவஸைசை அனுஷ்டிப்பவர்கள் அன்றைய நட்சத்திரம் கிழமை இரண்டையும் சேர்த்துத்தான் அமாவாசை அனுஷ்டிப்பார் கள். அச்வதி நட்சத்திரம் வியாழக்கிழமை அமாவசை என்ருல், அடுத்த அமாவாசை கார்த்திகை நட்சத்திரம் ஞாயிற்றுக்கிழமை

என்று வரும். இதில் வேதகால ஞானம் இருக்கிறது. பூமி தன்னைத் தானே சுற்றிக்கொண்டு சூரியனைச் சுற்றும்போது சந்திரன் பூமியால் ஆகர்ஷித்துக்கொண்டு அந்தரிக்ஷத்தில் சஞ்சரிக்காலம் என்பது விபரீத ஞானமாகும். இதைத்தான் சாஸ்திரிகள்வரை ஆமோதித்த தாக எண்ணுகிறார்கள் உலகஜனங்கள். கணிதசாஸ்திரிகளே இயற்கையை அனுபவிக்காமல் ஒப்புக்கொண்டாலும் விழித்துக் கொண்டவர்கள் ஒப்பமாட்டார்கள். வேதகால ஞானத்தை யாவரும் சுலபமாகத் தற்காலம் தெரிந்துகொள்ள உயர்ந்த லைப்ரரிகள் இருக் கின்றன. விபரீத ஞானம், ஞானமாகும்.

## குழந்தை புத்தி பாதாளலோகம்

நாம் வசிக்கும் இந்தியாவை நம் ஊரை நம் தெருவை நமது வீட்டை அனுசரித்து திக்குகள் நிச்சயமாகிறது. பிறகு நாம் இருக்கும் இடத்தைக்கொண்டு திக்குகளை நிச்சயிக்கிறோம். இரவில் இதர ஊர்களில் திக்குமுக்காடுகிறோம். அமெரிக்காவை எங்கிருக்கிறது என்றால் பாதாளத்தில் என்கிறோம். 12000 மைல்கள் கிழக்கில் காட்டினாலும் சரி, மேற்கில் காட்டினாலும் சரி பாதாளத்தில், புத்தியில் தென்படுகிறது. அமெரிக்கர்களுக்கு பகல் 12 மணி கிடையாதா? அவர்கள் நம்மை பாதாள உலகத்தவர்கள் இந்தியர்கள் என்று நினைக்கமாட்டார்களா? க்ளோப்பை வேகமாக உருட்டி இருவரும் இரவில் பாதாளவாசிகள், பகலில் தேவலோகவாசிகள் என்று எண்ணு, குழந்தை.

## இரவு, பகல் எப்படி உண்டாகியது

நான் எவ்வளவுதான் ஆராய்சிக்காக எழுதிப் பார்த்தாலும் பூமி தன்னைத்தானே மேற்கிலிருந்து கிழக்காகச் சுற்றுகிறது என்று எழுதமுடியவில்லை, மனம் சம்மதிக்கவில்லை. ஒப்புக்கொள்ளா விட்டால் வான சாஸ்திரம் என்பதற்கு பூமியைத்தவிர என்பதாகும். பூமியில் வசிக்கும் மனிதர்களுக்கே ப்ரயோஜனப்படக்கூடிய நட்சத்திர க்ரஹ கதிகள் என்று வேதம் அறியப்படுவதால் பூமியைச் சேர்த்தே சிந்திக்கவேண்டும். உண்மைகாணத் துடிக்கவேண்டும்.

## சந்திரத்ருவம் சேர்ப்பது

சந்திரத்ருவம் சேர்ப்பது: 248 நாள் சுற்றுவதால் கதிநிச்சயம் தெரிந்தது. தேவரை: 248 நாள். 8 மாதத்தில் சந்திரன் சுத்த தினத்தை அடைகிறது. காலாநிலை: 3031 நாள்கள். ரஸகைரிகை:- 12372 நாள்கள். வேதேத்த ஞானதுஷ்ட.-1600984 நாள்கள். இப்படி வாக்யங்கள் கூட்டப்படுகிறது. கலியுகாதி 4368-ஆம் வருஷ அளவில் இந்த வாக்யங்கள் சுத்தப்படுத்தப்பட்டு சந்திரன் நிலை தவறாமல் வந்திருக்கிறது. வேதகாலம் 4000 வருஷங்கள் முந்தி என்கிறோம். சுமார் 700 வருஷங்களுக்கு முந்தி சந்திரன் கணிக்கும் முறையை, கணித்து சுத்தப்படுத்தி வானத்தில் பார்த்து தக்க எழுத்துக்காளல் வாக்கியம் செய்துகொடுத்ததை படிக்கிறோம். தற் காலமும் அதைப் பின்பற்றி கணித்து வாக்ய பஞ்சாங்கத்தோடு கவனிக் கிறோம். 1 விநாடிகூட பிசகுவது இல்லை. இதை க்ரஹணம் நிரூபித்து

விடுகிறது. ஆனாலும் மேல்நாட்டு வான சாஸ்திர (சில விபரீத ஞானத்தில் கட்டுப்பட்டுள்ளோம்) வழியை ஒருவருக்கொருவர் சரியாக புரியவைத்துக்கொள்ளாமல் இருக்கிறோம். 248 நாளில் 3031 நாளில் 12372 நாளில் 1600984 நாட்களில் இவைகளைக் கூட்டி கலிசுத்த நாட்களில் சந்திரன் துருவங்களைக்கூட்டி சந்திரன் நிலை அறிகிறோம். இந்த சந்திரன் கிருஷ்ண பக்ஷ சந்திரனு சுக்ல பக்ஷ சந்திரனு என்று ஆராய்வோம்.

## கலிசுத்த நாட்கள் ஆதியிலிருந்து நாட்கள்

**கல்யப்தோ மாதுல குண : வருஷவாம் சேனஸய்யுத : புனரப் தாத்மானகுணுத் ஸாலப்ரிய விவர்ஜனுத் தத்ஸமாப்தை : தினைர் யுக்தம் சுக்ரவாராதிகம் தினம்.**

சுத்த வாக்கிய பஞ்சாங்கம் கதகலி வருஷம் 5061. சார்வரி வருஷம். கலி வருஷங்களை மாதுல = 365 ஆல் பெருக்க வேண்டும்.

மறுபடியும் கலி வருஷங்களை 5061 வாம்சம் $\frac{1}{4}$ ஆல் பெருக்கி சேர்க்க வேண்டும். அல்லது ஒவ்வொரு வருஷத்தின் கால் நாட்களை சேர்த்துக்கொள்ள வேண்டும். பிறகு 5061 ஐ,மானகுணுத் 5 ஆல் பெருக்கி ஸாலப்ரிய = 1237 ஐ கழித்து மீதியை தத்ஸமா = 576 ஆல் வகுக்க முழுதினங்கள் கிடைக்கும். இவைகளைக் கூட்ட வேண்டும். மீதம் இருப்பதை 60 ஆல் பெருக்கி நாழிகை விஞடிகள் எடுத்துக் கூட்டவும். கலி ஆரம்ப தினம் வெள்ளிக்கிழமை. 7 ஆல் வகுக்க மீதம் வராவிட்டால் வியாழக்கிழமை வரும். 1 மீந்தால் வெள்ளிக் கிழமையாகும். கூட்டிப்பார்த்து விடை கண்டுகொள்ளவும். வேதத்தால் கிடைக்கும் பலனைவிட இதில் விசேஷ ஞான பலன் கிடைக்கும்.

சார்வரி வருஷப் பிறப்பு கலி 1848572 நாள் 2 நாழிகை 5 விஞடிகளாகும்.

## மாத வாக்கியங்கள்

(1) ரங்கே மணிர் நீல : (2) விச்வாதிக ப்ராப்தி : (3) ச்ரேஷ்ட: க்ஷேமங்கதான : (4) போகவரோ மாரோயம். (5) விச்வஸ் தேப்ரிதிமய : (6) தனுர் வம்சஸ் ததீய : (7) லோகதேவஸ்தே புத்ர : (8) ஸங்கீ திவ்யாஸ் தத்வர : (9) நாகீதிகீசஸார : (10) தத்வாச்ச நிர்மாநக : (11) நித்யசீ போகாங்க : (12) யாகமான்யம் மாதங்க.

ஏதாவது ஒரு மாதம் 20 தேதிக்கு கிழமை வேண்டும் என்ருல் முன் மாதவாக்ய நாட்கள் கூட்ட வேண்டும். தேதியும் கூட்டி கிழமை கண்டு வாக்ய பஞ்சாங்கத்தை பார்க்க வேண்டும். சரியாக வரும். மாசி மாதக்ரஹணம் கணிக்க தை மாதவாக்யம் கூட்ட வேண்டும். தைமாத வாக்யம் தத்வாச்ச நிர்மாநக := 305-06-46 விஞடிகள். ஆதிநாட்களிலிருந்து இன்றுவரை நாட்கள் எண்ண வாக்கியங்கள் இருப்பது உயிர் உள்ள ஒருவருக்கே இது ப்ரயோஜனம் போல் ஆகும். கலி 1848877 நாள் 8 நாழிகைகள் 51 விஞடிகளாகும். வேதாங்க கணிதம் என்பதும் வேதாங்க ஜோதிஷத்தின் முதல் படியும் ஆகும். மாசி மாதம் 19 தேதிகள் சேர்க்க கலியுகாதி 1848897 நாட்களாகும்.

சந்திரன் ஊர்ந்து வருவதில் நாட்களின் துருவங்கள் தேவரை : 248 நாட்கள் முடிவதும் சந்திர த்ருவம் தநுர்விச்வஸுகம் ஹத்வா என்பதாகும். 27-44-6 விகலைகளாகும் காலாநலே :=3031 நாட்கள் சந்திரன் ஊர்ந்து வந்தால் யக்ஞ யோக ஸுநாயகம்=11-7-31-1 விகலையில் சந்திரன் காணப்படும். ரஸகைரிகை: 12372 நாட்கள் சந்திரன் ஊர்ந்துவந்தால் நித்யதேவஸுகாதீநம் = 9-27-48-10 விகலைகளில் சந்திரன் காணப்படும் நிச்சயம்.

வேதோத்த ஞான துஷ்ட :=1600984 நாட்கள் சந்திரன் வான வட்டத்தில் ஊர்ந்து வந்தால் ஸேனுனும் நாரிநாதனம் 7·2·0·7 விகலை களில் சந்திரன் த்ருவம் காணப்படும்.

## நாம் குறித்தநாளில் சந்திரன்

1848896 நாள். 1600984 நாட்கள் ஒரு தடவை கழிகிறது. 12372 நாட்கள் 20 தடவை கழிகிறது. 248 ஒரு தடவை கழிகிறது மீதம் வாக்யம் 224, க்ராமார்த்தீநர := 2-7-52 கலைகளாகும். 7-2-0-7+20 தடவைகளுக்கு 6-16-3-20 விகலைகள் +3031 இல்லை. 248 ஒரு தடவை 0-27-44-6 ஆக எல்லாம் கூட்ட 2-15-47-33 விகலை களில் சந்திரன் த்ருவம் ஆகும். வாக்யம் கூட்ட 4-23-39-33'', ஆகும். மாசி மாதம் மான்யாதிகலை 27 கூட்ட 4-24-6-33'' சந்திர த்ருவம் ஆகும். மான்யாதிகலை என்பது முன் புத்தகத்தில் கவனிக்கவும்.

## நட்சத்திர உச்சவாக்யங்கள்

(1) ச்ரோணு மேஷே ரதா (2) ச்ரவிஷ்டா விருஷபே நபா (3) சத பிஷக் விருஷபே ராமா (4) ப்ரோஷ்டபாந் மிதுனே பரா. (5) அஹிர் புத்னியே மிதுனே பாநு (6) ரேவதீகர்க்கீ யக்ஞ (7) அச்விநீ கர்க்கீ ரூபா (8) பரணீ கர்க்கீ சாபா (9) கிருத்திகா ஸிம்மே காயா (10) ரோஹிணீஸிம்மே குரு (11) மிருகசிரா : கன்யாநேயா (12) ஆர்த்ரா : கன்யாயுதா (13) புனர்வஸுஸ் துலா நீலா (14) புஷ்யஸ் துலா ராமா (15) ஆச்லேஷாஸ் துலா போகீ (16) மாகா விருச்சிக கலா (17) பல்குனி விருச்சிக லதா (18) உத்தரந் தனுர் நாமா. (19) ஹஸ்தா தனுர் பலா (20) சித்தா தனுச் சரை : (21) ச்வாதீ மகரே காமா (22) விசாகா மகரே வனம். (23) அனூராதா : கும்பே நாபி : (24) ஜ்யாஷ்டா : கும்பா கதா. (25) மூலம் கும்பே கச்ச. (26) பூர்வாஷாடா மீனே கவி: (27) உத்திராஷாடா மீனே காதா : காதி நவ, டாதி நவ, பாதி பஞ்ச, யாத்யஷ்டௌ.

## ஆகாயத்தில் அநேக நூற்றுக்கணக்கான நட்சத்திரங்கள்

ஆகாயத்தில் அநேக நூற்றுகணக்கான நட்சத்திரங்கள் காணப் படுகின்றன. இவைகளை சுமார் 4000 வருஷங்களுக்கு முந்தியே அவை களை நன்ருக ஆராய்ந்து அவைகளின் பிரயோஜனம் இதுதான் என்று வேதத்தில் குறிப்பிட்டு விட்டார்கள். அவைகளை குறிப்பிட்ட பின்னும் என்ன என்று விக்ஞானத்தால் ஆராய்ச்சி செய்து பார்த்தாலும் வேத காலத்திலேயே முடிவடைகிறதே தவிர தற்கால யந்திர விக்ஞானத் திற்கு இன்னும் கட்டுப்படவில்லை. முதல் நட்சத்திரம் அபிஜித். இதற்கு பிரும்ம நட்சத்திரம் என்று பெயர். பிரும்மரந்த்ரம் என்பார்கள்.

இந்த நட்சத்திரம் தலைக்கு நேராக உச்சம் ஆகும்போது மேஷராசி உதயமாகும். யுக ஆரம்ப தினம் இதற்குக் கட்டுப்பட்டதாகும். முதல் நட்சத்திரம் அபிஜித். இது கணக்கில் சேராவிட்டாலும் பிரும்ம நட்சத்திரம் என்றும் இதற்கு அஷ்டவாக்யங்கள் ஸ்தோத்திரங்கள் இருக்கிறது.

## நட்சத்திரங்கள் உச்சமாவது.

27 நட்சத்திரங்களுக்கு உச்சவாக்யங்கள் சொன்னோம். ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் அடையாளங்கள் உண்டு. ஒரு மாத காலம் வாக்யபஞ்சாங்கத்தைப் பார்த்து இன்றையதினம் என்ன நட்சத்திரம் என்று தெரிந்து கொண்டு ஆகாயத்தில் சந்திரனை கவனித்து வந்தால் நட்சத்திரரூபம் ஒருவாறு தெரிந்து விடும். பிறகு உச்ச நட்சத்திரம் என்ன என்பது ரூபத்தால் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். மேல் நாட்டு வான சாஸ்திர புத்தகங்களில் விஷயம் இல்லை. மேல் நாட்டு வான சாஸ்திரத்திற்கு ஏற்படுத்திய கருவிகளில் விஷயங்கள் நிறைந்து இருக்கிறது. நமது நாட்டு கணித முறையில் கவனித்தால் இருசாரர்களும் பயன் அடையலாம். தலைக்கு நேராக வருவது உச்சம், கிழக்கில் சமுத்ர மட்டத்தில் உதயம், மேற்கில் அடிவானத்தில் மறைவது அஸ்தமனம்.

## குறிப்பு

நட்சத்திரம் உதயமாகாது, உச்சமாகாது, அஸ்தமனம் ஆகாது என்றோம். இது சரியே. ஆனால் பூமி மேற்கிலிருந்து கிழக்காகச் சுற்ற வேண்டும் என்று ஒப்புக்கொண்டாலும் ஒப்புக் கொள்ளாவிட்டாலும் பூமி சுற்றித்தானே ஆக வேண்டும். ஆனால் இது ஸத்தியமா என்றால் சோதனையாகிறது.

## ஸத்திய சோதனை.

சூரியன் கிழக்கில் உதிக்கிறது. மேற்கில் அஸ்தமிக்கிறது. இதை நம் கண்ணால் பார்க்கிறோம். நம் கண்ணால் பார்ப்பது ஸத்யம். சாக்ஷிகள் இப்படித்தான் சாக்ஷி சொல்லுகிறார்கள். ஸா + அக்ஷி = சாக்ஷி = கண்ணோடு பார்ப்பது. பௌர்ணமியில் சந்திரனை சூரியன் காலையில் உதயமாவது போல் மாலையில் ஒருநாள் பார்க்கிறோம். பௌர்ணமிசந்திரனும் காலையில் மேற்கில் அஸ்தமிக்கிறது, சரி.

## சோதனை என்ன ?

அமாவாசை கழிந்த ஒவ்வொரு நாளும் சந்திரனை கவனி. மூன்றும் பிறை அன்று சந்திரன் மேற்கில் உதயமாகிறது. இன்றயை தினம் என்ன நட்சத்திரம் ? கார்த்திகை. ஒவ்வொறு நாளும் சந்திரனை மாலை 6 மணிக்கு கவனி. நட்சத்திரம் என்ன ? ரோஹிணீ, மிருகசீர்ஷம் என்போம். சந்திரன் எப்படி வானத்தில் காணப்படுகிறது ? அடிவானத்தில் காணப்பட்டது ? ஆகையால் சந்திரன் மேற்கிலிருந்து கிழக்கில் ஊர்ந்துவருவது தான் சரி. சூரியனும் அதேபோல் மேஷத்திலிருந்து விருஷபத்துக்கு வர மேற்கிலிருந்து

கிழக்கே ஊர்ந்து வருகிறது. சரியா ? கண் ஒப்புக் கொள்ளா விட்டாலும் மனது ஒப்புக் கொள்கிறது. சரிதான். இதே போல பூமி தன்னைத் தானே மேற்கிலிருந்து கிழக்காகச் சுற்றுகிறது என்பதை ஒப்புக் கொள்ள வில்லை! அவசரம் என்ன ? நிதானிப்போம்.

## பூமியின் ஆகர்ஷண சக்தி.

மேல் நாட்டு சம்மந்தம் இல்லாத காலத்தில் பாரத தேசத்தில் பூமிக்கு ஆகர் ஷண சக்தி உண்டு என்று யாரும் நினைக்கவில்லை. வேத புருஷர்களும் ஒப்பிட்டுப் பார்க்கவில்லை. (வேதம் = அறிவுக் களஞ்சியம்) பூமிக்கு ஆகர்ஷண சக்தி இருக்கத்தான் வேண்டுமா ? நிருபணம் ஆகிவிட்டதா ? பூமி தன்னைத் தானே சுற்றிக் கொள்ளத் தான் வேண்டும் என்பது அர்த்தாங்கீகாரம். பூமியின் கிழக்குக்கோடு என்று வரைந்தால் 25,000 மைல்களில் உருண்டையாகி விடுகிறது. உருண்டையான பிறகு பூமியின் மேல் ஒட்டாத பக்ஷிகள், மேகங்கள் காணப்படும் போது ஆகர்ஷண சக்தி என்பது ஏற்படுகிறது. பூமி மேற்கிலிருந்து கிழக்காக கணிதப்படி 1 மணிக்கு 1042 மைல்கள் வேகத்தில் சுற்றி விடுகிறது என்று அங்கீகரிக்க வேண்டும். அங்கீ கரிக்கிறோம். பக்ஷிகள் வானத்தில் பறக்கும் போது அவைகள் மேற் கில் தள்ளப் பட்டு விடும். அப்படி அவைகள் விட்டு விடப்படாமல் இருப்பதால் பூமிக்கு ஆகர்ஷண சக்தியிருக்கிறது என்பதாகிறது.

## மேல் நாட்டு விக்ஞானிகள்.

கலீலியோ என்பவர் (16ம் நூற்றுண்டு) பூமி தன்னைத் தானே சுற்றிக் கொண்டால் தான் இரவு பகல் வரும் என்றார். ஆராய்ச்சியில் அந்தக் காலத்தில் ஒத்து வரவில்லை ? பக்ஷிகளையும் பூமி சேர்துக் கொண்டுசுற்ற வேண்டும். இதை ஒப்புக் கொள்ளாத மதத்தலைவர்கள் கலீலியோவை தற்காலத்திற்கு ஒத்து வரவில்லை. இது வீண்வாதம் என்று சொல்லி விட்டார்கள்.

## ந்யூட்டன்

ந்யூட்டன் என்பவர் இரவு பகல் எப்படி உண்டாகிறது என்று ஆராய்ந்து வரும்போது மரத்திலுருந்து பழம் பூமியில் விழுந்தது. இந்தப்பழம் ஏன் மேலே செல்லவில்லை. பூமிக்கி ஆகர்ஷண சக்தி யிருக்கிறது அதனல்தான் பழம் கீழே விழுகிறது. பூமிக்கு ஆகர் ஷண சக்தி யிருப்பதால்தான் மேகமும், பக்ஷியும் பூமியால் ஆகர்ஷிக் கப்பட்டு பூமி தன்னைத் தானே சுற்றும் வேகத்தில் அவைகளும் காணப்படுகின்றன. ஆகர்ஷண சக்தியைத் தவிர மேகத்திற்கு காற்றின் சக்தியால் செல்லுவதும், பக்ஷிகளுக்கு அவைகளின் இறக் கைகளின் சக்தியால் செல்லுவதும் தனியாகப் பிரிக்கப்பட்டு, பூமி தன்னைத் தானே சுற்றிக்கொள்வதால் இரவு பகல் ஆதிகாலத்திலி ருந்து நடைபெறுகிறது என்றார்கள். ஆதிகாலத்தை குறிக்காதவர்கள் இவர்கள். ஆராய்ச்சி என்பது தொழில் என்பதாகும். தொழில் என்பது பணமாகும். ஆராய்ச்சி பணமாகாது.

## ஆகாயவிமானம்

யேரோப்ளேன் என்பது அந்தரிக்ஷத்தில் தற்காலம் பறக்கிறது. 1 மணிக்கி 400 மைல்கள். மேற்கே பறந்தால் எவ்வளவு மைல் போய் இறங்கும், கிழக்கே பறந்தால் எவ்வளவு மைல்கள் போய் இறங்கும். 1 மணிக்கு 400 மைல்கள் என்றால் 4 மணிக்கு 1600 மைல்கள் பறந்து இறங்கிவிடும். க்ளோப்பை வைத்துக்கொண்டு குறித்தால் கிழக்கில் 1600 மைல்கள் அல்லது மேற்கில் 1600 மைல்கள் சரியாக இருக்கும்.

## ஆக்ஷேபனை.

• பூமி மேற்கிலிருந்து தன்னைத்தானே சுற்றிககொள்ளும் போது ஆகாயவிமானமும், பக்ஷிகள், மேகங்கள் போல் ஆகர்ஷண சக்தியில் கட்டுப்பட்டதா ? கட்டுப்பட்டதோ கட்டுப்படாததோ முதல் கேள் விக்கு குளோப்பை வைத்துக்கொண்டுதான் பதில் சொல்லுவார்கள். இடத்தையும் குறித்துவிடுவார்கள். குறித்த இடத்தில் மணிப்படி விமானம் இறங்காவிட்டால் கவலைப்படுவார்கள். க்ளோப் சுற்றுகிறது என்பதை நம்பித்தான் இருக்கிறார்கள். உங்கள் ஆக்ஷேபனை தீர தற்கால ராக்கெட்டுக்களால்தான் கவனிக்கவேண்டும்.

## பூமியின் வாசனை.

வாசனை வஸ்துக்கள் இருந்தால் அதைச்சுற்றி 10 அடியிலிருந்து 50 அடிகள் வரை நன்றாக வாசிக்கிறது. இது தான் ஆகர்ஷணம் இதேபோல பூமி ஓடிக்கொண்டும் சுற்றிக்கொண்டும் இருப்பதாகவும் இதுவே வாசனை என்பதாகவும் ஆகர்ஷணம் என்பதாகவும் ஆகும். இது ஓர் ஆராய்ச்சி.

## பூமியும் ராக்கெட்டும்.

பூமி தன்னைத்தானே சுற்றிக்கொள்வதை தலைக்கு நேராக 90° டிகரியில் அம்பு எய்வதுபோல் சக்தியுள்ள (ராக்கெட்டை) வஸ் துவை விடவேண்டும். அதே வஸ்து 6000 மைல்கள் அப்பால் உள்ள ஊர் பூமியின் சுழற்சியில் வரும்போது 6 மணி கழித்து வந்து சேர்ந் தால் பூமி சுழலுகிறது என்பது ஒப்புக்கொள்ளப்படும். அமெரிக்கா வில் விட்ட ராக்கெட்டும், ரஷ்யாவில் விட்ட (சுட்ட) ராக்கெட்டும் அவர்கள் ஊரிலேயே விழுமேயானால் பூமியின் சுழற்சியை ஒப்புக் கொண்டதாக ஆகாது.

## ஒப்புக்கொள்ளவேண்டியவர்கள்.

4 வேதத்தில் ஏதாவது ஒன்றைப் படித்தவர்கள் சாஸ்திரங்களில் தேர்ச்சியடைந்தவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும். மடாதிபதிகள் ஒப்புக்கொள்ளவில்லை. அவர்கள் ஒப்புக்கொள்ளும் படி செய்ய வேண்டும். தர்ம ரக்ஷகர்கள் ஒப்புக்கொள்ளவேண்டும். வாக்ய, திருக்கணித பஞ்சாங்கம் கணிப்பவர்களை க்ரஹங்கள் ஊர்ந்து வரும் வழியை படம் போட்டு கணிக்கச்செய்தால் முதல் உண்மை சூரியன் ஊர்ந்து செல்வதும், இரண்டாவது வேதகாலமும், புரிந்துவிடும்.

மூன்ருவது பூமிதன்னைத்தானே சுற்றுவது என்பது ராக்கெட்டால் தான் புரியும். தர்மஸொத்துக்களை செலவிடுவதாலும் புரிந்துக் கொள்ளலாம். பூமி தன்னைத்தானே சுற்றுகிறது என்பவர்கள் க்ளோப்பை தலைபக்கம் வடக்கு கால் பக்கம் தெற்கு என்று குறிப்பிடாமல் வடக்குத்தெற்க்காகவே க்ளோப்பை கையில் வைத்துக் கொண்டு சுற்றி, சுற்றும் பாதையைக் காட்டி உண்மை தெரிந்தால் பிள்ளைகளுக்கு போதிக்கவேண்டும். உண்மை தெரிந்தவரை போதித்து தெரியாத இடத்தில் பாடத்தை நிறுத்தி விடவேண்டும் இதுவே கல்வியின் தர்மமாகும். தெரியாததைச் சொல்லி மயங்க விடக் கூடாது.

## பிரும்மரக்ஷஸ்

ஒருவனுக்குத் தெரிந்தவித்தையை பிறருக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். அப்படி கற்றுக் கொடுக்காதவர்களை பிரும்மரக்ஷஸ்ஸு என்பார்கள். சங்கர விஜயம் என்னும் புத்தகத்தில் ஓர் பிரும்மரக்ஷஸ் கதைவருகிறது. அந்த பிரும்மரக்ஷஸ் வழியில் போகும் படித்த, படிக்க ஆர்வமுள்ள பிரும்மசாரிகளை பரீக்ஷிக்கும். தன்சொத்தை கொடுக்க பெண்ணைகொடுப்பவன் பிள்ளையின் யோக்யதை கவனிப்பது போல் பச் என்பதற்கு மேல் வழி கேழ்க்கும். பசனம் என்பான் அடித்துவிடும். சொத்துச்சேராது. பக்வம் என்று சொன்னர் சொத்தை கொடுத்தது.

## 750 ரூபாய்கள்.

பூமி சூரியனைச்சுற்ற வில்லை. சுற்றுகிறது என்று படம் போட்டு நிரூபித்து இயற்கையில் சம்மந்தப்படுத்திக்காட்டினுல் 750 ரூபாய்கள் பெற்றுக் கொள்ளலாம். மேல் கதை நடந்ததோ நடக்காததோ பிள்ளைகளுக்கு பூமி சூரியனைச்சுற்றுகிறது என்று பாடம் கற்பிப்பவர்கள் நேரில் வந்தோ கடித மூலமாகவோ பெற்றுக்கொள்ளத் தான் வேண்டும். அல்லது இந்த ஆராய்ச்சியில் ஈடுபடவேண்டும்.

## சூரிய கிரஹணம்.

கலியுக ஆரம்பத்தில் சூரிய க்ரஹணம். சூரியன் சந்திரன், கேது மூன்றும் சேர்ந்து முதல் பாகையில் இருந்ததால் சூரியக்ரஹணத்தில் காலம் ஆரம்பிக்கப்பட்டது. வெள்ளிக்கிழமை.

## சூரியன் ஊர்ந்து வரும் காலம்.

மாதவாக்யங்கள் கொடுத்திருக்கிருேம். அதன் படி நாள் நாழிகை விநுடிகள்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மேஷத்தில் | 30. | 55. | 32 | துலாத்தில் | 29. | 54. | 7 |
| விருஷபத்தில் | 31. | 24. | 12 | விருச்சிகத்தில் | 29. | 30. | 24 |
| மிதுனத்தில் | 31. | 36. | 38 | தனுசுவில் | 29. | 20. | 53 |
| கடகத்தில் | 31. | 28. | 12 | மகரத்தில் | 29. | 27. | 16 |
| சிம்மத்தில் | 31. | 2. | 10 | கும்பத்தில் | 29. | 48. | 24 |
| கன்னியில் | 30. | 27. | 22 | மீனத்தில் | 30. | 20. | 21 |

ஆக 27 நட்சத்திரங்களிலும் சூரியன் ஊர்ந்து வர 365 நாள்கள் 15 நாழிகை 31 விநாடிகள் 15 தரப்பரைகள் ஆகும். சூரியன் ஊர்ந்து செல்லுகிறது என்பதை வேதத்திற்கு ஆரம்பமாக வைத்துக்கொண்டு வேதத்தை நிறுத்தினார்கள். தற்காலம் மேல் நாட்டு சம்மந்தத்தால் சூரியன் ஊர்ந்து செல்ல வில்லை என்பதை காதில் கேட்கிறோம். ஜோதிஷர்கள் இரண்டிலும் கலந்து கொள்ளும் படி பிரசாரமும் கணிதமும் இருக்கிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| சூரியனுக்கு | 12° | முந்தியும் பிந்தியும் | சந்திரன் | இருந்தால் தெரியும் |
| „ | 17° | „ | செவ்வாய் | „ |
| „ | 13° | „ | புதன் | „ |
| „ | 11° | „ | குரு | „ |
| „ | 9° | „ | சுக்கிரன் | „ |
| „ | 15° | „ | சனி | „ |

## ஹிந்துக்களின் பண்டிகைகள் விடுமுறைகள்

பள்ளிக் கூடங்களின் விடுமுறை நாட்கள் எப்படி விடப்படுகிறது. பஞ்சாங்கத்திற்காக விடுகிறார்களா? தமிழ் தேதி இங்கிலீஷ் தேதிகளுக்காக விடுகிறார்களா? இவைகளை பிள்ளைகளே அடுத்து வரும் வருஷங்களுக்குக் கணித்துக் காண்பிக்கலாம். அல்லது கணித புத்தகங்களில் சேர்க்கலாம். உண்மையும் தெரியும். ஆராய்ச்சியும் விரிவடையும்.

ஆவணி அவிட்டம் ஸரஸ்வதி பூஜை, தீபாவளி, வைகுண்ட ஏகாதசி, போகி, சங்கராந்தி, சிவராத்திரி, மாஹாளய அமாவாசை, கோகிலாஷ்டமி, விநாயக சதுர்த்தி, கார்த்திகை தீபம் இவைகளுக்கு பள்ளிக் கூடங்களில் விடுமுறைகள் இருக்கிறது. இந்த விடுமுறை நாள்கள் சூரியன் ஊர்ந்து வருவதாலேயே உண்டாகிறது. நமது தேசத்து பண்டிகை நாட்கள் சூரியன் ஊர்ந்து வந்ததாக கணித்து விட்டார்கள் அதன்படி அதே தேதிகளில் நடக்கிறதா? இல்லை இப்பவும் கணிக்கிறார்கள். ஆனால் ஆராய்ச்சி செய்த விஷயத்தை படத்தின் மூலம் விஸ்தரித்துக் காட்டவில்லை. முடியும். ஆசைப்படவில்லை. நமது சாஸ்திரங்களை மறைத்துக்கொண்டார்கள் என்று மறைத்துக்கொண்டே இருக்கிறார்கள்.

## கொடைக்கானல் வான ஆராய்ச்சி நிலையம்

கொடைக்கானல் வான ஆராய்ச்சி நிலையத்திலிருந்து பூமி சூரியனைச் சுற்றுகிறது. என்று கடிதம் எழுதினார்கள். நேரில் கண்டு விசாரிக்கச் சென்றதில் மேல் நாட்டு கருவிகளைக்காட்டி இவைகள் பூமி சூரியனைச் சுற்றுகிறது என்பதை நிரூபிக்கின்றன. என்றார்கள். தமிழ் பஞ்சாங்கம் கணிக்கத் தெரியவில்லை இங்கிலீஷ் காலண்டர் படியே நட்சத்திரங்களையும் க்ரஹங்களையும் குறிக்கிறார்கள். வருங்காலத்தில் தமிழ் பஞ்சாங்கம் கணிப்பவர்கள் கொடைக்கானல் வான ஆராய்ச்சி நிலையத்தில் உத்தியோகம் வஹித்தால் மேல் நாட்டாருக்கும் (வானசாஸ்திர கருவிகள்) நமக்கும் உபயோகப்படும்.

## ஆராய்ச்சியாளர் யார் ?

கொஞ்ச நாள் முந்தி (20-7-1960) பத்திரிகையில் ஆராய்ச்சியாளர் ஒருவர் தன் வேலையை ராஜீநாம செய்துவிட்டுதன் ஆராய்ச்சிக்கி மதிப்பில்லை என்று பூலோகத்தையே விட்டுவிட்டார் அவ்வளவுதான் மறு நாள் ஏகப்பட்ட கூட்டம் மந்திரிகள் தலைவர்கள் கூட்டம் போட்டு ஆராய்ச்சியாளர்களை தூக்கிவிடவேண்டும் என்றார்கள். ஆரய்ச்சியாளர் என்பவர் பூலோகத்திலேயே இருந்தால் தெரிந்துகொள்ளமுடியாதா ? முடியவில்லை.

பூமி சூரியனை சுற்றவில்லை என்று வால்போஸ்ட் ஒட்டினோம் ஒட்டினவர்கள் இரவில் மதருஸில் ஒட்டினார்கள். சட்டப்படி தண்டனை கிடைத்தது அபாரதம் 20 ரூபாய்கள் செலுத்தப்பட்டது என்ன விஷயம் என்பது தெரியாது. இதே விஷயம் வேறு நாடாக இருக்குமே யானால் பத்திரிகைகளில் தலையங்கமாகக் காணப்படும் பரசுராமயுத்தம் நடக்கிறது ? புது டில்லியில் உள்ள வான சாஸ்திர ஆராய்ச்சி தலைமை ஆபீஸுக்கு புத்தகங்கள் அனுப்பி பூமி சூரியனை சுற்றவில்லை என்ற இதழ்களையும் அனுப்பினோம். தமிழில் இருப்பதால் தமிழ் தேச, வான நிலையத்திற்குள் வந்தது புத்தகங்கள். புத்தகங்களைப் படித்தார்களோ இல்லையோ பரிகாசம் போல் காணப்படும் பதில் வந்தது. நேரில் சென்றோம். போக வரசிலவு ஆயிற்று ஆராய்ச்சிக்கி தகுந்த பதில் காணமுடியவில்லை வால்போஸ்ட் அடித்தோம். அதனாலும் நஷ்டமே ஏற்பட்டது ஆராய்ச்சியாளர் யார்

## சந்திரவாக்யங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1 | கீர்ணச்ரேய : | 1 | வித்தோ நாதன் |
| 2 | தேனவச்ரீ : | 2 | வைத்தோ நீத்தான் |
| 3 | ருத்ரஸ்து நம்ய : | 3 | வானு பூலோகம் |
| 4 | பகோ ஹியாஜ்யா | 4 | வீமீதேநற்கம் |
| 5 | தன்யேயந்நாரீ | 5 | வைத்தவன் கோமான் |
| 6 | தநவான்புத்ர : | 6 | கையோ நீதங்காண் |
| 7 | க்ருஹயாஸுரா ராஞ்யா | 7 | திடம் பெற்றுலாவர் |
| 8 | பாலே நகுலம் | 8 | விதியோமதியோபோம் |
| 9 | தனுபிஃக்கலே : | 9 | வைப்போ நீவானில் |
| 10 | தசஸுநவ : | 10 | தேடும் பெண்ணே நீ |
| 11 | ஹோமஸ்யஸ்ருவ : | 11 | சேவுறவாரீர் |
| 12 | தீநாஸ்தேந்ருணும் | 12 | தேனே நூற் பொருள் |
| 13 | முகம் நாரீணும் | 13 | துரால் போம் வாரும் |
| 14 | பவபக்னுஸ்தே | 14 | நீடிர் சீரோ நூல் |
| 15 | ச்ரீர்நியுதே | 15 | பாலோசைத நூல் |
| 16 | சங்கிலாநாத : | 16 | குலேமின்னேபெண் |
| 17 | ச்ரேஷ்டாஸா கதா | 17 | ஆனல் செல்வப் பெண் |
| 18 | ஸௌக்யஸ்யாநந்த : | 18 | செகநண் போமேல் |
| 19 | த்யானம் மன்யோஹி | 19 | பண்போசுகமே |
| 20 | தீரோஹிராஜா | 20 | கையாதேபால் தேன் |
| 21 | ச்ருத்வாஸ்ய யுத்தம் | 21 | வாழ்த்தீர் வள்ளலே |
| 22 | அபவத்ச்ராத்தம் | 22 | ஓதிர் நீண்டானே |

| | | | |
|---|---|---|---|
| 23 | கோரஸோ நநுஸ்யாத் | 23 | சிவாசெம்பொற்கொள |
| 24 | த்ருமாதந்யாநயே | 24 | ஆளுடையரோகண் |
| 25 | இஷ்டம் ராஞ்யக்குர்யாத் | 25 | சொல்லவா சொர்ப்பனம் |
| 26 | தன்யாவித்யேயம்ஸ்யாத் | 26 | ஐயந்நீதக் கடல் |
| 27 | த்வம்ரக்ஷா ராஜ்யஸ்ய | 27 | வீமா நூலாம் நலம் |
| 28 | க்ஷேத்ரஜம : | 28 | பூண்டாரேன் போவோம் |
| 29 | நீலே நேத்ரே | 29 | கோழிக்கோமானே |
| 30 | ஜலம் ப்ராஞ்யாய | 30 | வேபிலாக்கோலம் |
| 31 | சசிவந்யஸ்யாத் | 31 | உருகீர தரோ |
| 32 | கோரஸப்ரிய : | 32 | பிரானென் நாதன் |
| 33 | வநாநியத்ர | 33 | விணே கோபந்தான் |
| 34 | அன்னம் கோத்ரச்ரீ : | 34 | போபோநில்லாதான் |
| 35 | ராஷ்ட்ராஸ் தேநாகா : | 35 | ஞானம் பூணேதில் |
| 36 | திகண்ட்: கில | 36 | கைவிளைகனியோ |
| 37 | புரோகா அபி : | 37 | கலாவிச்சொல்லீர் |
| 38 | மான்யஸ்ஸகவி : | 38 | சுபதெய்வ மீதோ |
| 39 | அஷ்டௌ நாசம் | 39 | கோமான் களோதும் |
| 40 | பாலோமேகேச : | 40 | கிளிபுகழும் போனம் |
| 41 | குசதாரிண : | 41 | வருகை வாழ்த்தும் |
| 42 | இஷ்டிர் வித்யதே | 42 | போக மீந்தபூவோ |
| 43 | ஸராஜாப்ரீத : | 43 | ஏலாம் வேதா தூலோ |
| 44 | ஸுகப்ரயோஸௌ | 44 | செய்கிற்றுனஞ்செய் |
| 45 | தீகஸ்துஹ்ராஸ : | 45 | வைகிற்கூடாதென் |
| 46 | அங்கானியதா | 46 | சேதிப்போமங்கே |
| 47 | ஸேநாவாந்ராஜா | 47 | செஞ்சொல் மீதாமே |
| 48 | தீராஸன்னதா : | 48 | வைப்பாமென்கொங்கை |
| 49 | சாலிநம்ப்ரதானம் | 49 | சுகியோநாளைப்போம் |
| 50 | க்ஷீரம்கார்ணேநயேத் | 50 | ஊராநிரோ போகம் |
| 51 | ரத்நசயோ ந்ருப : | 51 | தாதோகூடப் போடல் |
| 52 | தாப்ரஜாப்ரஞ்யாஸ்யு : | 52 | கூனர் தேனு வோரம் |
| 53 | அச்வாநாம் கோயோக்ய : | 53 | போதீர் பொன்னம்பலம் |
| 54 | தத்வைரம் ப்ரியாயா : | 54 | கூடீர் தாழாத்தலம் |
| 55 | தவஸ்த்வம் | 55 | வைத்தீர் நீரோ பொன் |
| 56 | க்ராமஸ்தஸ்ய | 56 | வாழுஞ் சூலக்கோன் |
| 57 | ஜன்மஜரா | 57 | நேருங்கேளா யோன் |
| 58 | இஷ்டகா கார்யா | 58 | போகந்தரவல்லோன் |
| 59 | குலகுருஸ்யாத் | 59 | அறிடிற்காலம் போம் |
| 60 | முநிஸ்து உக்ர : | 60 | முத்தோ பூவோ மான் |
| 61 | பிரமோ தகர : | 61 | நாடு வேறற்றுல் |
| 62 | சசாங்கோநுக : | 62 | குருவல்லோன் மிக்கோன் |
| 63 | வக்ஷ்யாமி காலம் | 63 | நீதம் புகமின்னே |
| 64 | ஸம்பேத : க்கலே : | 64 | வெற்றீரே வாழ்விர் |
| 65 | சீலப்ரியஸ்த்வம் | 65 | உற்றிடா நந்தீர் |
| 66 | வேலா தரவ : | 66 | நீடி நூல் பாரீர் |
| 67 | விபிந்நம் கர்மா: | 67 | நீத்திராபற்றும் |
| 68 | தர்மவாந்ராம : | 68 | நையும் நீராடும் |
| 69 | திக்வாளோ நாஸ்தி | 69 | எண்கலேயோ நூல் |
| 70 | தேபால : ப்ராந்த : | 70 | ஊரில் விட்டாரூண் |

| | | | |
|---|---|---|---|
| 71 | காமாஸந்நஸ : | 71 | அருளெங்கோவென்ரும் |
| 72 | ஹோம் புத்ரார்த்தம் | 72 | வேறு படாதென் போம் |
| 73 | மணிர் மாநந்த : | 73 | குருமுன் கோடேன் |
| 74 | நாவித்த : பதே | 74 | போற்றீர் சைவனே |
| 75 | உத்கல நிதி : | 75 | போ தறி வோரை |
| 76 | சூத்ரஸ்து யோக்யா | 76 | மூத்தார் தூமழை |
| 77 | விருத்தம் ஸ்தீரீதனம் | 77 | சீமான் கைமாலே |
| 78 | ஹீநப்ரா யோநட : | 78 | ஏனோராஜயோகம் |
| 79 | திகச்வ் : கிந்நோயம் | 79 | கையில் நீங்காப் போகம் |
| 80 | திசதுந : ப்பத்யம் | 80 | சேருமூரோ வர்க்கம் |
| 81 | ஜநோந்த : ப்பாபக : | 81 | வேலோ கைப்பவனம் |
| 82 | க்ருஹ்யாஸ்யாத் | 82 | சால நண்டோ போசொல் |
| 83 | மாந்யம்லோகே | 83 | குலச் சிவன் பொன்னே |
| 84 | கண்யச்சரை : | 84 | ஐயங் குடாரோ |
| 85 | ஸுகீஸந்நித்யம் | 85 | எட்டாரென போம் |
| 86 | லோபோ தான்யஸ்ய | 86 | விட்டீரைம் மலமோ |
| 87 | அங்குரம் நீரே | 87 | மோகவான் போகான் |
| 88 | தாவத்வைத்யோத்ர | 88 | வைத்தீர் தீரமால் |
| 89 | கத்வாஸுராஷ்ரம் | 89 | கிட்டீரெட்டாதான் |
| 90 | கமன காலம் | 90 | திருவோபணி வோம் |
| 91 | தயாவாந்ரொகீ | 91 | தேற நீர் காணிலோ |
| 92 | ஹோமஸ்தானம் வனம் | 92 | சேருமென்னேதீர் |
| 93 | ச்ரீமான் புத் ரோவா | 93 | ஆடுவன் பாடீர் |
| 94 | தந்மன நாம | 94 | ஊர்புகும் போதும் |
| 95 | தானுஞம்க்ரம் : | 95 | வேண்டோ மோயாதும் |
| 96 | க்ஷேத்ரவா நஸ்து | 96 | பூண்டாய் நீர்பொற்பூண் |
| 97 | சம்புர்ஜயதி | 97 | புக்கீர் வேதநூல் |
| 98 | ரத்னுங்கஞர்த்தம : | 98 | ஆமோ விடோ மென் |
| 99 | ரக்ஷியோஸௌ பார்த்த : | 99 | தீரமென்பதேன்னே |
| 100 | ஸவேத்நிந்தா | 100 | மெய்த்தவம் போக்கேன் |
| 101 | ஜனேமன் யோஹி | 101 | மெல் குணமே |
| 102 | ஸவாதீராஜா | 102 | வென்றீர் சேர் மானே |
| 103 | ஆகாரோயுத்தம் | 103 | கோமலா மனேயோ |
| 104 | ஸாமிச்ராத்தம் | 104 | தடேரும்மானே |
| 105 | கார்யஹாநிர் நார்யா : | 105 | கடலேனே போகம் |
| 106 | தம்பா நாராநஷ்டா : | 106 | மேனீரோ நாடோலம் |
| 107 | விகலானும் கார்யா : | 107 | வீமலங்கோன் பதம் |
| 108 | ஹரணம் பாத்யஸ்ய | 108 | வேதா முகமலர் |
| 109 | துலாஸம் ப்ரயாய | 109 | கூறில் மெய் யானந்தம் |
| 110 | திகந்த : | 110 | தைப் பிறை போ மோ |
| 111 | கவி : புத்ர : | 111 | பற்றீர் கற்ருரோ |
| 112 | தத்வாங்க நேயம் | 112 | கூடீர் பின் கோலம் |
| 113 | ஜீர்ஞேமே காய : | 113 | சேருஞ்சுக மன்னே |
| 114 | ஜயம்ஹரஸ்ய | 114 | தேவரேகாலமோ |
| 115 | அசநவர : | 115 | போதுபோமன்பாம் |
| 116 | தாலுலேகோத்ர | 116 | ஊரினிற்சார்வாம் |
| 117 | ஸங்கதோநாக : | 117 | தெளிநூலொளியோ |
| 118 | விசுத்தயோகி | 118 | சீருவைமணியோ |

| | | | |
|---|---|---|---|
| 119 | தாராங்கம் நப : | 119 | நூருகிற்போகீர் |
| 120 | ப்ரியார்த்த : கவி : | 120 | ஆடல்செகவீடோ |
| 121 | பாபோயம் நிசி | 121 | அம்பரம்போதும் |
| 122 | தந்யோமந்யோம்சே | 122 | வைமன்புகழும் |
| 123 | போகார்த்தம் ராமா | 123 | வீறிசையாமுன் |
| 124 | ராமாகீயதே | 124 | வானுஞ்சிவனூரோ |
| 125 | அத்யாஹாரஸ்து | 125 | போகவேந்தாபூண் |
| 126 | சரீரகோஸௌ | 126 | புமாநாதரென்னே |
| 127 | லோஹசக்ரஸ்த : | 127 | மிடிபூதாதென் |
| 128 | ப்ராகநிஷ்டதம் | 128 | நானிப்போகண்டேன் |
| 129 | திவ்யாவாந்ராஜா | 129 | தேவனீதானே |
| 130 | அம்சார்த்தி நோர்த்தி : | 130 | ஒருத்தென்பொய்யை |
| 131 | ஸேநாயா : க்ரோத : | 131 | பெற்றோம் நல்லாரை |
| 132 | தானம் பாநோர்நஷ்டம் | 132 | தேனேசீரோமோனம் |
| 133 | பூமிஸ்தஸ்யநித்யம் | 133 | நீடுநூல்பத்தோதல் |
| 134 | சக்ரார்த்தம் ப்ராஞ்ஞாய | 134 | மூத்தானைச்சார்போகம் |
| 135 | தாபார்யாபாபோயம் | 135 | மூர்த்திநண்பன்கழல் |
| 136 | திசோம்பராண்யஸ்ய | 136 | தேடுமின்மாதம |
| 137 | க்லௌர்நாஸ்தி | 137 | மின்னோர்டூர்கோள் |
| 138 | ஆனஜோயம் | 138 | முன்னேவேலன் |
| 139 | தானுனியம் | 139 | தேவோகோவோகண் |
| 140 | தபச்ரேயஸ்யாத் | 140 | பூதநாடகனே |
| 141 | அம்புபிரிஷ்டை : | 141 | கோதில்சீராகன் |
| 142 | க்ஷமாஸ்துநரை : | 142 | பூணூநூலோதான் |
| 143 | லோலதீ : புத்ர : | 143 | கிரிகைவல்லானே |
| 144 | தேரௌத்ரா நாகா : | 144 | பூவாதாம்பொழில் |
| 145 | விலோமகுலம் | 145 | நீதிக்குணமிக்கோன் |
| 146 | ஸமந்தோராகீ | 146 | பெறும் பேனுகில் |
| 147 | தைலப்ரியத்வம் | 147 | கூடினுற்கண்டீர் |
| 148 | ஸாம்ப்ரதம் ரவி : | 148 | மெய்யாநூல் பாடீர் |
| 149 | குலாநாம்கர்மா | 149 | பதியோபற்றும்போம் |
| 150 | ச்ருத்வாஸ்பராணி | 150 | பாடீர்சீராகும் |
| 151 | தர்மோதாநந்து | 151 | வைத்துடேன்போடுண் |
| 152 | தூஷ்யம்கோத்ரந்தே | 152 | ஏர்த்ததிவாய்நூல் |
| 153 | துலார்த்தீநோர்த்தீ | 153 | சூலியெங்கோவென் |
| 154 | ஜித்வாஸ்யரத : | 154 | தேடீர் கற்றுவென் |
| 155 | ச்ரமணெ நிந்தா : | 155 | பாகுருசொல்லே |
| 156 | ஷட்விதாந்யாஹா : | 156 | கூறீரையனே |
| 157 | தத்ரகோர் நிதி : | 157 | கூருளிக்கோதை |
| 158 | கேசாஸ்தே காளா : | 158 | கருவூர்க்கதையோ |
| 159 | தநோநிநோநயே | 159 | கற்றோர் சொற்பொற்கோலம் |
| 160 | சிசிரெபாநீயம் | 160 | குருஞானக்கோலம் |
| 161 | போகமாத்ரம்நித்யம் | 161 | சீரிதுவாம் போகம் |
| 162 | தூனம்தனேபத்யம் | 162 | கண்டோதேனேகவன் |
| 163 | ஸத்வேநச்ரேயஸ்யாத் | 163 | செல்வரோ வாழ்பவர் |
| 164 | முகேச்ரீ: | 164 | உற்றூர்தாமோ |
| 165 | தாராவிருஷ்டி : | 165 | ஐயாசீலம் |
| 166 | பாலிதம்ராஞ: | 166 | அறிவூருதோ |

